Improvement Corporation and entrust the entire work to that body with a view to achieving quicker progress in this Slum Clearance work?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, the Government do not believe that by merely multiplying Bodies and Corporations, any work could be expedited. Actually there is a lot of opposition to Slum Clearance even from the slum dwellers themselves. However, whatever delay there has been in the matter of clearing the slums will be tackled and we propose to spend the allotment for clearance during this year.

SRI P. G. MANICKAM : நடைப்பாதைகளில் வசிப்பவர்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுப்பதற்காக ஒரு லட்சத்தி ஆயிரம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பதாக கவர்ன்மெண்டார் தெரிவித்திருக்கிறார்கள். அவர்களுக்கு எந்த எந்த இடங்களில் வீடுகள் கட்டிக்கொடுக்கப்படும் என்று அறிய விரும்புகிறேன்.

SRI K. ANBAZHAGAN : தனிப்பட்டோர் நிலங்களில் அமைக்கப்பட்டிருக்கும் 'ஸ்லம்ஸ்' (குடிசைகள்) உள்ள பகுதிகளில் சுகாதார வசதிகள் நல்ல முறையில் கவனிக்கப்படாமல் இருக்கின்றன. ஆகையால் 'ஸ்லம் க்ளியரன்ஸ்' செய்யும் பெரும் பணிகளுக்கு முன்பு 'ஸ்லம்'-களில் 'க்ளியர்' செய்வதற்கு சர்க்கார் திட்டமிடுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சென்னை நகரத்தில் 330-க்கு மேற்பட்ட குடிசைகள் (ஸ்லம்ஸ்) இருக்கின்றன. அவைகளில் சில சர்க்கார் பகுதிகளில் உள்ளவை, சில தனியார் பகுதிகளில் உள்ளவை. தனிப்பட்டவர்கள் பகுதிகளில் உள்ளவைகளில், 'இம்ப்ரூவ்மெண்ட்' பண்ணுவதற்கு அவர்களுடைய சம்மதத்தைப் பெறவேண்டியிருக்கிறது. ஆகவே உடனடியாக சர்க்கார் பகுதியில் 'ஸ்லம் க்ளியரன்ஸ்' திட்டத்தைக் கொண்டுவந்திருக்கிறார்கள். தனியார் பகுதிகளிலுள்ள குடிசைகள் மோசமாக இருந்தால் அங்கே 'ஸ்லம் க்ளியரன்ஸ்' திட்டத்தைக் கொண்டு வருவதற்காக ஸ்லம் க்ளியரன்ஸ் சட்டப் பிரகாரம் அவைகளை 'அக்விஸிஷன்' செய்வதற்கு சர்க்கார் முயற்சி செய்கிறார்கள்.

SRI P. S. SANTHANAM : சேரி அபிவிருத்தித் திட்டத்திற்காக மத்திய சர்க்காரால் கொடுக்கப்பட்ட பணத்தில் வட ஆற்காடு ஜில்லா நகராண்மைக் கழகத்திற்கு எவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஒன்றும் இல்லை.

MR. SPEAKER : தங்கள் தங்கள் ஜில்லாவைப்பற்றி கனம் அங்கத்தினர்கள் கேள்வி போட்டால் உடனே எப்படி பதில் சொல்லமுடியும் ? அவைகளைத் தனிக் கேள்விகளாகப் போடவேண்டும்.

*Backward and Scheduled Classes*

*92 Q.—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Chief Minister be pleased to state—

(a) whether any concessions which were granted previously to Backward and Scheduled Classes in regard to age, fees and otherwise in respect of examinations held by the Madras Public Service Commission and selection for appointments made by it have since been withdrawn ; and

(b) if so, what they are and the reasons for withdrawing the same?

13th February 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The answer is in the negative.

(*b*) Does not arise.

### *Ammonium sulphate*

* 93 *Q*.—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) who are the distributors of ammonium sulphate in Block Development or National Extension Service Block areas;

(*b*) whether such distributors could sell ammonium sulphate for cash; and

(*c*) whether ammonium sulphate is made available to agriculturists who can afford to purchase on cash without asking for loan from the Government?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Co-operative Societies have been appointed as distributors of ammonium sulphate in National Extension Service and Community Development areas.

(*b*) Yes.

(*c*) Yes.

SRI S. LAZAR : சர்க்கார் இதுபோன்ற உத்திரவைப் பிறப்பித்திருந்தாலும்கூட சில பகுதிகளில், பணம் கொடுப்பவர்களுக்கும் அம்மோனியம் சல்பேட் கொடுக்கப்படாதது சர்க்காருக்குத் தெரியுமா? இதைத் தடுப்பதற்கு சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : என்னிடம் அதுபற்றி தகவல் இல்லை. கனம் அங்கத்தினர் விவரங்களைக் கொடுத்தால் நான் கவனித்து வேண்டியதைச் செய்கிறேன்.

SRI V. S. MANICKASUNDARAM : அம்மோனியம் சல்பேட் கூட்டுறவு சொஸைடிகளின் மூலமாகவும் ஏஜெண்டுகள் மூலமாகவும் வினியோகிக்கப்படுவதைத் தவிர, தனிப்பட்ட முறையிலும் விற்கபபடுகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தேசிய வளர்ச்சித் திட்டமும் சமுதாய நலத் திட்டமும் அமுலில் இல்லாத பகுதிகளில் தனிப்பட்ட நபர்களும் ஓரளவு வினியோகம் செய்கிறார்கள்.

SRI A. R. SUBBIAH MUDALIAR: நான் ப்ளாக் ஏரியாவிலும் கூட்டுறவு சொஸைடிகள் இருக்கவேண்டுமென்று சர்க்காருக்கு விண்ணப்பம் வந்திருக்கிறதா? அதற்கான நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்படி ஒன்றும் சர்க்கார் இப்போது யோசிக்கவில்லை.

SRI A. R. MARIMUTHU : இப்போது நமக்குக் கிடைக்கும் ரசாயனங்கள் போதாமலிருப்பதால் அதிகப்படியான ரசாயன உரங்களைப் பெறுவதற்கு சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போது அதிகப்படியான உரங்கள் இறக்குமதி செய்யப்பட்டுவருகின்றன. ஒவ்வொரு ஆண்டும் நமக்குப் போதுமான அளவு உரம் இறக்குமதியின் மூலம் கிடைக்கும் என்று நம்பப்படுகிறது.